# கல்வெட்டு

திருவள்ளுவராண்டு 2025 (பவ ஆண்டு) மார்கழித் திங்கள்





உவா ஏர் - கல்வெட்டு, முதலாம் இராஜராஜன் காலம், மரக்காண
திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்

லாண்டிதழ் - 41 ( 1995, ஜனவரி திங்கள் ) விலை ரூ. 1-
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை

உள்ளே.........



குறிப்பு : 1993-ஆம் ஆண்டு நவம்பர் காலாண்டிதழ் எண். 40க்குப் பிறகு இடையில் நான்கு இதழ்கள் சில நிர்வாகக் காரணங்களால் வெளியிட இயலவில்லை. ஆதலால் 1995 - ஜனவரித் திங்களில் காலாண்டிதழ் எண் 41 வெளியிடப்படுகிறது.

# "நாழி வழி" மைல்கல்

**கி. ஸ்ரீதரன்**
பதிவு அலுவலர்,
தொல்பொருள் ஆய்வுத்துறை.

பண்டைக்காலத்தில் நெடுஞ்சாலையில் உள்ள ஊர்கள் பெருவழிகளால் இணைக்கப்பட்டிருந்தன என்பதைக் கல்வெட்டுகள் எடுத்துரைக்கின்றன. கங்கை கொண்ட சோழபுரத்தில் இராசராசன் பெருவழி, இராசேந்திரன் பெருவழி, விளாங்குடையான் பெருவழி, குலோத்துங்க சோழன் திருமதில் பெருவழி, கூழையானைப் பெருவழி என்பன குறிக்கப்படுகின்றன. கோவைக்கு அருகே இராசகேசரிப் பெருவழி என்று குறிக்கும் கல்வெட்டு நெடுஞ்சாலையின் அருகே பாறையில் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இதேபோன்று ஊரிலுள்ள தெருக்கள் பெயரிடப்பட்டு அழைக்கப்பட்டு வந்ததையும் கல்வெட்டுகள் மூலம் அறிகிறோம்.

ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குச் செல்லும் முன் செல்லப் போகின்ற ஊரின் தூரத்தைப் பொறித்து வைக்கும் வழக்கம் தமிழகத்தில் இருந்திருக்கிறது. தர்மபுரி மாவட்டத்தில் அதியமான் கோட்டையிலிருந்து தர்மபுரி செல்லும் சாலையில் ஒரு கல்லில் "அதியமான் பெருவழி நாவற் தாவளத்திற்குக் காதம் உகூ" என்று எழுதப்பட்டு, எழுத்தறிவு இல்லாத பாமர மக்களும் அறிந்து கொள்ளும் வகையில் பெரிய துளைகள் இரண்டும், சிறிய துளைகள் ஒன்பதும் இடப்பட்டுள்ளன. இதே போன்று தர்மபுரி-கிருஷ்ணகிரி சாலையில் 7 கி.மீ. தொலைவிலுள்ள கெங்கி ரெட்டிப்பட்டி என்ற ஊரில் காணப்படும் கல்லில் "அதியமான் பெருவழி நாவற் தாவளத்துக்கு காதம் உஎ" என வெட்டப்பட்டுள்ளது. துளைகளும் இடப்பட்டுள்ளன. நடப்பட்டுள்ள இரு கல்லுக்கும் இடைவெளி தூரம் சுமார் 10 மைல்தான் இருக்கும். இக்கணக்குப்படி பார்த்தால் இரு காதத்திற்கு 10 மைல், அதாவது 1 காதத்திற்கு சுமார் 5 மைல் என்ற உண்மை தெளிவாகிறது. 1 காதம் என்பதற்கு 10 மைல் அல்லது $7\frac{1}{2}$ மைல் என்ற இரு கருத்துக்களும் உண்டு. இம் மைல் கற்களின் காலம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டாகும்.

இக்காலத்தில் செல்லக்கூடிய தூரத்தை அறிந்துகொள்ளும் மைல் கற்கள் நடப்படுகின்றன. இவற்றுக்கு முன்னோடியாக தர்மபுரி காதக் கற்கள் விளங்குகின்றன எனக்கொள்ளலாம்.

திருச்சியில் தலைமைத் அஞ்சலக வளாகத்தில் ஒரு மைல் கல் தரையில் சாய்ந்து கிடக்கிறது. இதில் உள்ள வாசகம்[1]

| முதல் பக்கம் | இரண்டாவது பக்கம் |
| --- | --- |
| 1. 80 | 2. 2 |
| MILES | MILES |
| TO | TO |
| MADURA | TRICHINOPOLY |
| மதுரைக்கி | திருச்சினுப்பள்ளிக்கி |
| அய | உ |
| ஞழிவழி | ஞழிவழி |

எனப் பொறிக்கப்பட்டுள்ளது. இதில் உள்ள சிறப்பு என்ன வென்றால் ''திருச்சியிலிருந்து மதுரைக்கு 80 நாழிவழி'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

''நாழிக்கல்' என்று மைல் கல்லை அழைக்கும் வழக்கம் சென்ற நூற்றாண்டில் நாஞ்சில் நாட்டில் இருந்திருக்கிறது. நாழிவழி என்பது ஒரு நாழிகை நேரத்தில் மனிதன் நடக்கும் தொலைவாகும். நாழிகை நேரம் என்பது 24 நிமிடங்கள் கொண்டது. மனிதனின் நடைவேகம் மணிக்கு ஏறத்தாழ மூன்று மைல் என்பர். நாழிகைக் கணக்குப்படி $2\frac{1}{2}$ மைல் வருகிறது.

($2\frac{1}{2}$ நாழிகை - 60 நிமிடம் - 1 மணி) திருச்சியிலிருந்து மதுரைக்கு இன்று 128 கி.மீ. தூரம் உள்ளது.

ஒரு நாழிகைக்கு ஒரு மைல் - ஒரு நாழிகை என்பது 24 நிமிடம் (24 நிமிட தூரம்) 80 மைலுக்கு - 80 நாழி. எனவே இம்மைல் கல்லில் காணப்படும் 80 நாழி என்பது சரியான கணக்காகவே உள்ளது.

மேற்கண்ட மைல்கல் மதுரை செல்லும் பாதையில் ஆங்கிலேயர் காலத்தில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். இதுபோன்ற மைல் கற்கள் பல ஊர்களில் காணப்படுகின்றன. தொல்பொருள் ஆய்வுத் துறையால் தஞ்சை மராட்டிய அகழ்வைப்பகத்தில் மைல்கற்கள் பல சேகரிக்கப்பட்டுக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

இவற்றிலெல்லாம் ஊரின் பெயர் மற்றும் தொலைவு குறிக்கப் பட்டுள்ளது. தொலைவு தமிழ் எண்ணிலும் எழுதப்பட்டுள்ளது. திருச்சியில் காணப்படும் மைல் கல்லில் மேல் பகுதியில் ஆங்கிலத்தில் 80 மைல் என்றும் கீழே 80 நாழிவழி என்றும் குறிப்பிடப் பட்டுள்ளமை ஒரு தனிச்சிறப்பாகும்.

---

1. இக்கல்வெட்டினைப் படியெடுத்து உதவியவர் திரு. மே. சீனிவாசன், இளநிலைக் கல்வெட்டாய்வாளர்.

# தொல் பழங்காலத்தில் சமயநிலை

து. துளசிராமன்
காப்பாட்சியர்
தொல்பொருள் ஆய்வுத்துறை, பூண்டி.

கற்களை ஆயுதங்களாக உபயோகித்து உணவு சேகரிப்பவனாகவும், நாடோடியாகவும் வாழ்ந்த மனிதன் படிப்படியாக நாகரிகமடைந்தான் என்பது வரலாறு காட்டும் உண்மையாகும். தமிழகத்தில் பழைய கற்கால மனிதன் செங்கற்பட்டு மாவட்டம் கோர்த்தலை ஆறு மற்றும் ஆரணியாற்றுப் பள்ளத்தாக்குகளில் வாழ்த்தான் என்பதற்கு உறுதியான தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன. இப்பகுதியில் கிட்டத்தட்ட 67 ஊர்களில் இம்மனிதன் பயன்படுத்திய கற்கருவிகள் கிடைத்துள்ளன. குடியம் என்னுமிடத்தில் பழைய கற்கால மனிதன் வாழ்ந்த 16 குகைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இங்கு மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் அகழாய்வுகளில் கிடைக்கும் கற்கருவிகளின் மூலம் இவர்களின் வாழ்க்கையைப் பற்றி அறிந்துக்கொள்ள முடிகிறது. கரடுமுரடான கற்கருவிகளைக் கொண்டு வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியையும், இயற்கையாக கிடைக்கும் காய்கனிகளையும், கிழங்குகளையும் இவர்கள் உணவாகக் கொண்டனர். ஓரிடத்தில் நிலையாகத் தங்கி வாழாமல் உணவைத் தேடியலையும் நாடோடி வாழ்க்கை வாழ்ந்தார்கள். இவர்கள் இறந்தவர்களை அடக்கம் செய்யவில்லை.

இங்கு நடைபெற்ற ஆய்வுகளில் பழைய கற்கால மனிதனின் சமய வாழ்க்கையைப் பற்றி அறிய உறுதியான சான்றுகள் ஏதும் கிடைக்கவில்லை. ஆயினும் கிடைக்கும் சான்றுகளைத் தொல் இன மரபியல் (Ethno Archaeology) ஆய்வுகளின் அடிப்படையில் தற்போது வாழும் பழங்குடி இனமக்களின் வழிபாட்டு முறைகளுடனும், பிற இடங்களில் கிடைத்த சான்றுகளுடனும் ஒப்பிட்டுப் பழைய கற்கால மக்களின் சமய வாழ்வைப் பற்றி ஓரளவு அறியலாம். பொதுவாக இம்மக்கள் இயற்கைத் தெய்வங்களான சூரியன்,

சந்திரன், காற்று, மழை ஆகியவற்றை வழிபட்டனர். நாக வழிபாடு சிறப்புற்றிருந்தது எனலாம். கோர்த்தலை ஆற்றுப் படுகையில் உள்ள அத்திரம்பாக்கம் என்னுமிடத்தில் நடைபெற்ற அகழாய்வுகளில் வேல் வடிவில் செதுக்கப்பட்ட கற்கோடாரிகள் நிறைய கிடைத்தன. இவற்றை மரக்கம்புகளின் நுனியில் விலங்குகளின் நரம்பு அல்லது கொடிகளைக் கொண்டு கட்டி வேல்களாகப் ப்யன் படுத்தியுள்ளனர். வேட்டையில் மிகுந்த அளவில் விலங்குகள் கிடைக்கவேண்டும் என்பதற்காக இவ்வேல்களையே தரையில் நட்டு வழிபட்டிருப்பார்கள் என ஊகிக்கலாம். இதைப் போலவே வட்டு (Disc) எனப்படும் வட்ட வடிவ சக்கரம் போன்ற கல் ஆயுதங்களும் இங்கு கிடைத்துள்ளன இந்த ஆயுதத்தையும் வழிபட்டிருக்கலாம். இல்வழிபாடு ஒரு லட்சம் ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டவையாகும். தொடக்கக் காலத்தில் வலிமை மிகு செயல்களுக்காக மேற்படி ஆயுதங்களை உபயோகித்து வணங்கிய மக்கள், பிற்காலத்தில் தீயவற்றை அழிக்கும் வேலவனுக்கும் திருமாலுக்கும் அவற்றை முக்கிய ஆயுதங்களாக்கி மகிழ்ந்தனர்.

பழைய கற்காலத்திற்குப் பின் கி.மு. 10,000 முதல் கி.மு. 6000 வரை நிலவிய நுண்கற்காலம் பற்றிய தடயங்கள் செங்கற்பட்டு, திருநெல்வேலி, மதுரை, ஈரோடு, தஞ்சை மாவட்டங்களில் கிடைத்துள்ளன. நுண்கற்கால மக்களும் உணவு சேகரிக்கும் மக்களாகவே வாழ்ந்தனர். இவர்கள் கடற்கரையோரமும் குடியேறத் துவங்கினர். வேட்டையாடுவதும், மீன் பிடித்தலும் இவர்களின் முக்கிய தொழில்களாக விளங்கின. இவர்கள் சிறிய கற்களைக் கூர்மையாக்கி ஆயுதங்களாக உபயோகித்தனர். நுண்கற்காலத்தைத் பற்றி நன்கு ஆராய்ந்த பிரிகேட் இல்சின் அம்மையார் இம்மக்களை இன்றைய மலைவாழ் மக்களான ஆந்திரத்தின் செஞ்சுகள் அல்லது இலங்கையின் வெட்டர்களோடு ஒப்பிடுகிறார். இலங்கை வெட்டர்கள் இறந்தவர்களைப் புதைப்பதிலும், இறந்தவர்களுக்கு வழிபாடு செய்வதிலும் பலவகையான சடங்குகளைச் செய்தார்கள். இறந்தோரின் ஆவிகளைச் சாந்தப்படுத்துவதற்காக மிகுதியான பொருட்களைப் படைத்தார்கள். ஏராளமான சிறு தெய்வங்களை - அதுவும் வேட்டைக்கு உதவும் தெய்வங்களை வணங்கினார்கள். வேட்டையில் கிடைக்கும் விலங்குகளின் தலைகளை அறுத்து இத் தெய்வங்களுக்குப் படைத்தார்கள். இவ்வாறு தலைகளைப் படைக்கும் முறை கடைக்கற்கால மக்களிடமும் வழக்கிலிருந்தது

என்பதை இவர்கள் வாழ்ந்த மலைக் குகைகளில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் கிடைத்த விலங்குகளின் எலும்புகளில் தலைகள் பெரும்பாலும் காணப்படாதது உறுதிப்படுத்துகிறது.

அடுத்து கி மு. 6000 முதல் கி.மு. 2000 வரை நிலவிய புதிய கற்காலத்தில், உணவு சேகரித்து உண்டு வாழ்ந்த மனிதன் உணவுப் பொருட்களை உற்பத்தி செய்பவனாக மாறினான். உழவுத் தொழிலும், கால்நடைகளை வளர்த்தலும், மட்கலன்கள் செய்தலும் புதிய கற்கால மக்களின் வாழ்க்கையில் பெரும் மாற்றங்களை ஏற்படுத்தின. கோரைகளால் வேயப்பட்ட வட்ட வடிவக் குடிசைகளில் வாழ்ந்தனர். நன்கு தேய்க்கப்பட்ட கூர்மையான கற்கருவிகளை உபயோகப்படுத்தினர். தமிழகத்தில் வடஆர்க்காடு மாவட்டம் பையம்பள்ளி என்னுமிடத்திலும், கர்நாடகத்திலும், ஆந்திரத்திலும் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் மூலமாகவும் தர்மபுரி மாவட்டம் மல்லப்பாடியில் கிடைத்த இக்கால ஓவியங்கள் மூலமாகவும் புதிய கற்கால மக்களின் சமய வாழ்க்கையைப் பற்றி ஓரளவிற்கு அறிந்துக் கொள்ள முடிகிறது இவர்கள் நாடோடி வாழ்க்கையைவிட்டு ஓரிடத்தில் நிலையாக வாழத் தலைப்பட்டார்கள். விவசாயத்திற்காகக் கால்நடைகளைப் பழக்கி வளர்க்க ஆரம்பித்தார்கள். இயற்கைத் தெய்வங்களுடன் பசுக்களையும், காளைகளையும் வழிபட ஆரம்பித்தனர் விவசாயத்தில் நல்ல விளைச்சலைப் பெறுவதற்காக வளமை வழிபாட்டையும் (Fertility cult) செய்தனர். தாய்த் தெய்வ வழிபாடு இக்காலத்தில்தான் தோன்றியது. மக்களினப் பெருக்கமும் நாட்டின் வளம் சுரக்க வேண்டும் என்பதற்காகவும் பெரிய வயிறும், பெரிய கொங்கைகளும் கொண்டு விளங்கும் தாய்த் தெய்வ உருவங்கள் படைக்கப்பட்டன. இதற்குச் சான்று தருவது போல் ஆந்திரத்தில் பிக்லிஹால் அகழாய்வில் தாய்த் தெய்வச் சுடுமண் உருவம் ஒன்று கிடைத்துள்ளது. வேட்டையில் நிரம்ப விலங்குகள் கிடைக்க வேண்டும் என்பதற்காக இவர்கள் புதிய கற்கருவிகளையும் நிலத்தில் நட்டு வழிபட்டார்கள். இப்பழக்கம் இன்றளவும் தர்மபுரி, வடஆர்க்காடு மாவட்ட கிராமப் பகுதிகளில் காணப்படுகிறது. புதிய கற்கால மக்கள்தான் முதன்முதலில் இறந்தவர்களைத் தம் வீடுகளுக்கு அருகில் குழி தோண்டி அடக்கம் செய்யும் முறையை ஆரம்பித்தனர். இதனால் இறந்தவர்களையும் இவர்கள் தெய்வமாக வணங்கினர் எனத் தெரிகிறது.

அடுத்து கி.மு. 1500 முதல் கி.மு. 500 வரை நிலவிய பெருங் கற்காலத்தில் வாழ்ந்த மக்களின் சமய வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்ளச் சிறந்த சான்றுகள் அகழாய்வு மற்றும் அக்கால ஓவியங்கள் மூலமாக கிடைத்துள்ளன. பெருங்கற்கால மக்கள் சிறந்த முறையில் ஊரிருக்கைகள் ஏற்படுத்திக் கொண்டு கூட்டமாக வாழ்ந்தார்கள். வேளாண்மையும், வேட்டையாடுதலும் முக்கிய தொழில்களாக விளங்கின. இக்காலத்தில் முதன் முறையாக இரும்பின் பயன் அறியப்பட்டதால் கற்கருவிகளுடன் இரும்புக்கருவிகளையும் செய்து உபயோகப்படுத்தினர், முக்கியமாக இறந்தவர்களை ஊருக்குப் புறத்தே தனியாக ஓரிடத்தில் அடக்கம் செய்தார்கள். இதுவே பிற்காலத்தில் இடுகாடு எனப் பெயர் பெற்றது. இவர்கள் பெரிய கற்களைக் கொண்டு பல வகையான ஈமச்சின்னங்களை (கல்லறைகள்) அமைத்தார்கள்.

இறப்புக்குப்பின் உள்ள வாழ்க்கையில் பெருங்கற்கால மக்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார்கள். மிகுந்த உழைப்போடு உருவாக்கப்பட்ட கல்லறைகளும், அவற்றுள் படைக்கப் பட்ட பொருட்களும் இதனைத் தெளிவுபடுத்துகின்றன. இறந்தவருக்கு அவருடைய மேலுலக வாழ்க்கையில் பயன்படும் என்ற வகையில் கல்லறையில் அவர்கள் உபயோகித்த மட்கலன்கள் இரும்புக் கருவிகள் போன்ற பொருட்கள் இறந்தவருடன் வைத்துப் புதைக்கப்பட்டன. இக்கல்லறை பக்கக் கற்களில் பெரும்பாலும் இடிக்கும் பக்கக்கல்லில் இடுதுளை (Port-hole) ஒன்று காணப் படுகிறது. இத்துளை ஈமப்பொருட்களை உள்ளே இடுவதற்கு பயன்படுத்தப் பட்டிருக்கலாம். இந்த இடுதுளை கிழக்கு நோக்கியிருப்பதால் சூரிய வழிபாடு இம்மக்களிடையே சிறப்புற்றிருந்தது எனலாம்.

ஆதிச்சநல்லூர் அகழாய்வில் திரிசூலம், வேல் போன்ற இரும்பு ஆயுதங்கள் கிடைத்தன. திரிசூலம் சிவனுடைய ஆயுதம். வேல் முருகனுடையது என்று கொள்ளலாம். இங்கு வெண் கலத்தால் செய்த மூடிகளில் சேவல் உருவங்கள் பலவும் காணப் படுகின்றன. சேவல் முருகக் கடவுளுடன் தொடர்புடையதாகும். மேலும் ஆதிச்சநல்லூரில் நாக்கில் குத்திக்கொள்ளும் சிறு அலகுகளும் கிடைத்துள்ளன. இவை பழனி போன்ற முருகன் கோவில்களுக்குச் காவடி எடுக்கும் பக்தர்கள் குத்திக்கொள்ளும் அலகுகள் போன்று காணப்படுகின்றது.

பெருங்கற்காலத்தில் தாய்த் தெய்வ வழிபாடு பெரும் சிறப்புற்றிருந்தது எனலாம். ஆதிச்சநல்லூரில் உலோகத்தாலான சிறிய தாய்த் தெய்வச்சிலை ஒன்று கிடைத்துள்ளது. இச்சிலை பெரிய வயிறும், பெரிய கொங்கைகளும், அகன்ற புட்டங்களும் கொண்டுள்ளது. இவை தாய்மையின் அடையாளங்களை மிகுத்துக் காட்டவே செய்யப்பட்டன எனலாம். அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை தென் ஆர்க்காடு மாவட்டம் உடையாநத்தம் என்னும் ஊரில் பெருங்கற்காலத்தைச் சேர்ந்த கல்லாலான தாய்த் தெய்வ உருவம் ஒன்றை கண்டுபிடித்தது. இதனை இவ்வூர் மக்கள் ''விசிறிக்கல்'' என அழைக்கின்றனர். இதே போன்ற உருவம் ஒன்று வடஆர்க்காடு மாவட்டம் மோட்டூர் என்னுமிடத்திலும் உள்ளது. இதனை ஒத்த உருவங்கள் மத்திய தரைக்கடல் பகுதியிலுள்ள மினோவன்-கிரீட்டிலும், இத்தாலியில் உள்ள சர்தீனியாவிலும் கிடைத்துள்ளன. இவை கி.மு. 1700-ஆம் ஆண்டைச் சேர்ந்தவை. இந்தியாவில் இதைப்போன்ற கல் உருவங்கள் கோதாவரி ஆற்றுப்பகுதியிலும், சிறிய செப்பு உருவங்கள் (Copper heads) கங்கையாற்றுப் பகுதியிலும் கிடைத்துள்ளன. இவ்வுருவங்களை ஆய்வாளர்கள் வேதகால ''அதிதி'' என்னும் தாய் தெய்வத்துடன் ஒப்பிடுகின்றனர். இலட்சுமியின் 'ஸ்ரீவஸ்த' உருவத்தோடு இது பெரிதும் ஒத்துள்ளது. இவ்வுருவம்தான் தமிழகத்திலேயே இதுவரை கிடைத்துள்ள தெய்வ உருவங்களில் மிகவும் தொன்மையானதாகும். இது கி.மு. 1000-ஐச் சேர்ந்ததாகும்.

தமிழகத்தில் சுமார் 20 இடங்களில் மலைக்குகைகளிலும், பாறைகளிலும் பெருங்கற்காலத்தைச் சேர்ந்த ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இவ்வோவியங்கள் யாவும் செங்காவிக் கட்டி மற்றும் சுண்ணக்கட்டி மூலம் வரையப்பட்டுள்ளன. இதில் சில காட்சிகள் இறைவழிபாட்டைக் குறிப்பனவாகத் தெரிகிறது கோவை மாவட்டம் வேட்டைக்காரன் மலையில் ஒரு குழு நடனக்காட்சியுள்ளது. இது கிராம தெய்வத்திற்குப் பலியிட்டுப் படையல் போடும்போது ஆடும் ஆட்டம் போல் காணப்படுகிறது. தென் ஆர்க்காடு மாவட்டம் பாடியேந்தல் என்னுமிடத்திலுள்ள ஓவியங்களில் சிவலிங்கம் போன்ற உருவமும், தருமபுரி மாவட்டம் மகாராஜாக்கடையில் தேர் போன்ற உருவமும் காணப்படுகின்றன.

**முடிவுரை :**

பழைய கற்காலத்தில் இயற்கைத் தெய்வங்களை வணங்கிய மக்கள், நுண்கற்காலத்தில் அத்தெய்வங்களுக்குக் கால்நடைகளைப் பலியிடும் வழிபாட்டைத் தொடங்கினர். பின்னர், புதிய கற்காலத்தில் விவசாயத்திற்குப் பெரிதும் துணைபுரிகிற மாடுகளையும் பசுக்களையும் தெய்வமாக வழிபட்டனர். இத்துடன் வளமை வழிபாட்டையும் தாய்த்தெய்வ வழிபாட்டையும் சிறப்பாகச் செய்தார்கள். பெருங்கற்காலத்தில்தான் மக்கள் ஓரளவிற்கு பண்பட்ட சமய வழிபாட்டு முறைகளை மேற்கொண்டனர். இக்காலத்திலும் இயற்கைத் தெய்வங்களை வழிபடும் முறையும், அத்தெய்வங்களுக்குக் கால்நடைகளைப் பலியிடும் வழக்கமும் தொடர்ந்து இருந்தது இத்துடன் சிவபெருமான், முருகன் போன்ற கடவுள்களையும் வழிபட ஆரம்பித்தனர். இறந்தவர்களை வணங்குவதில் பல்வேறு சிறப்பான வழிபாட்டு முறைகள் பின்பற்றப்பட்டன. இக்காலத்தில் தாய்த் தெய்வ வழிபாடு மிக உன்னத நிலையை எட்டியது எனலாம்

**துணை நூல்கள் :**


1. தொல் பழங்காலம் (1975).
2. Bridget Allchin — Stone - Tipped Arrow (1966)
3. F. R. Allchin — Piklihal Excavations (1960)
4. பி. எல். சாமி — தமிழ் இலக்கியத்தில் தாய் தெய்வ வழிபாடு (1980)

# பிற்காலப்பாண்டியர் காலத்தில் சிற்பக்கலை

டாக்டர். செந்தில் செல்வக் குமரன்

சோழர் காலத்தில் சிற்பக்கலைக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் பாண்டியர் காலத்தில் கொடுக்கப்படவில்லை எனலாம். கோயில் கருவறைச் சுவர்களிலும், அர்த்த, மகாமண்டபச் சுவர்களிலும் பல கோட்டங்களை அமைத்து, சிற்பங்களை இடம் பெறச் செய்வது சோழ நாட்டில் பின்பற்றப்பட்ட கட்டடக் கலை மரபாகும். ஆனால் பாண்டிய நாட்டில் கோட்டங்களுக்குப் பதிலாக, கோட்டம் போன்ற அமைப்பினைக் காண முடிகிறது. பாண்டிய நாட்டுக் கோவிலில் மூலத் தெய்வங்களுக்கும், பரிவார தெய்வங்களுக்கும் மட்டுமே சிலைகள் செய்து வைக்கும் வழக்கம் காணப்படுகிறது ஆதலால் சிற்பங்களைக் காணுதல் அரிதாக உள்ளது. இருப்பினும் சில ஊர்கள், பிற்காலப் பாண்டியர் காலக் கற்சிற்ப, மரச் சிற்பக் கலைக்கு சான்றுகளைத் தருவதாக அமைந்துள்ளன.

**கற்சிற்பக்கலை**

திருநெல்வேலி அருகில் செங்காணி என்ற ஊர் உள்ளது. இதில் 14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிவன் கோயில் உள்ளது. இதில் பிள்ளையார், சண்டிகேஸ்வரர், ஆறுமுகநயினார் போன்ற பரிவார ஆலயங்கள் உள்ளன. ஆறுமுகநயினார் சிலை, மயில் மேல் அமர்ந்த கோலத்தில், பிரபையுடன் மிக அருமையாகச் செய்யப்பட்டுள்ளது. திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஆறுமுகர் சிலைகளுள் மிக அழகு வாய்ந்தது இச்சிலை எனலாம்.

பிற்காலப் பாண்டியர் சிற்பக் கலைக்குச் சிறந்த, உறுதியாகக் கூறக்கூடிய சான்றுகளாக விளங்குவது தென்காசி விசுவநாதர் கோயில் சிலைகளாகும். இக்கோயிலைப் பராக்கிரமபாண்டியன் உருவாக்கினான்.

"இரண்டாவதின் எதிர் இருவத்திரண்டாவது வைகாசி மாதம் துடங்கி முப்பத்து ஒன்பதாவது வரை பதினேழு வருஷத்துக்குள்ளுந் திருப்பணி செய்து நிறைவேற்றின"

என்று கி. பி. *1446*-இல் தொடங்கி கி.பி. *1463*-இல் கோவில் கட்டி முடிக்கப்பட்டது என்பதை அவனது கல்வெட்டு உணர்த்துகிறது. இரிஷபதேவர், அறுபத்து மூன்று நாயன்மார்கள், உலகமுழுதுடைய நாச்சியார், சூரியன், சந்திரன், பிள்ளையார், முருகன், சண்டிகேஸ்வரர், சுரதேவர் ஆகிய கற்றிருமேனிகள் இம்மன்னன் காலத்தில் செய்யப்பட்டவை.

பிற்காலப் பாண்டியர்களுள் அழகிய கோபுரக் கற்பணியை அமைத்தவன் இவனே. இருநிலைக் கோபுரக் கற்பணி அமைத்து அதில் எண்ணற்ற கோட்டங்களை இடம் பெறச் செய்துள்ளான்.

"காண்டகு சீர்புனை தென்காசிக் கோபுரக் கற்பணியா றாண்டில் முடித்துக் கயிலை சென்றான்"

என வரும் தென்காசி பாடற் கல்வெட்டு கோபுரக்கற்பணி இவனால் செய்யப்பட்டது என்பதை உறுதி செய்யும்.

இக்கோபுரக் கோட்டங்களில் சிவனுடைய பல்வேறு கோலங்கள் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டு, வைக்கப்பட்டுள்ளன. திரிபுராந்தகர், கங்காதரர், பிச்சாடனர், காலாரிமூர்த்தி, கரியுரித்தபெருமான், அர்த்தநாரீஸ்வரர் எனப் பல்வேறு திருவுருவங்கள் அவற்றுள் அடங்கும். இவற்றைத் தவிர கோபுர வாயிலின் உட்பகுதி, மண்டப விதானத்தில் பல சிறிய சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் கண்ணனின் லீலைக் காட்சி மிகச் சிறிய சிற்பமாக அழகாக வடிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. பாலமுருகன் கோயிலில் அதிட்டானத்தில் பல சிறிய சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இதில் இராமாயணக் காட்சி குறிப்பிடத்தக்க வகையில் செதுக்கி வைக்கப்படடுள்ளது.

கோபுரத்திற்கும் விஸ்வநாத சன்னதிக்கும் இடைப்பட்ட சிற்ப மண்டபம் கி.பி.1473-இல் பராக்கிரம பாண்டியனின் தம்பி குலசேகர பாண்டியனால் கட்டப்பட்டதாகும். இவனது 4-ஆவது ஆட்சி ஆண்டுக்கல்வெட்டு,

''நாமும் இன்னாயனார்க்கு திருவோலக்க மண்டபமாக குலசேகர
மண்டபமும் திருப்பணி செய்வித்து'',

என்று கூறுவதன் மூலம் இவனால் உருவாக்கப்பட்டது இம்மண்டபம் என அறியலாம். பிற்காலப் பாண்டியர் காலத்தில் பெருந்தூண் சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இம்மண்டபத் தூண்களைக் கூறலாம்.

இம்மண்டபத்தில் மிக கவனமாக வீரபத்திரர்கள், தாண்டவ மூர்த்திகள், மோகினி உருவங்கள், ரதி, மன்மதன், திருமால், காளிதேவி ஆகியோரின் திருஉருவங்கள் சிற்பமாகச் செய்யப் பெற்றுள்ளன. தக்கனின் யாகத்தை அழித்தான் சிவன் என்பது புராணம். அப்புராணத்திற்கு வடிவம் கொடுத்தான் சிற்பி. இரண்டு வீரபத்திரர்களை உருவாக்கினான். போருக்குக் கோபத்தோடு புறப்படும் நிலையிலும், மற்றொன்றைத் தக்கன் கழுத்தில் வாளைச் செருகி அவன் அகந்தையை அழித்து நிற்கும் கோலத்திலும், பல கைகளுடன், பல ஆயுதங்களுடன் வடித்து வீரபத்திரனின் உருவத்தையும், போர்க் கோலத்தையும் பார்ப்பவர்கள் முன்னே காட்சியாகக் கொண்டுவந்து நிறுத்தி யுள்ளான் சிற்பி.

இரண்டு தாண்டவச் சிலைகளுள் ஒன்று, கயிலாயத்தை இராவணன் தன் தோளில் தாங்கக் கைலாசவாசியான சிவன் ஊர்த்துவ தாண்டவம் ஆடி நிற்கும் கோலத்தில் உருவாக்கப் பட்டுள்ளது. ஒரு பாதத்தை முயலகன் முதுகில் ஊன்றி, மறு பாதம் விண்ணற உயர்த்திக் கொவ்வைச் செவ்வாயில் குமிழ் சிரிப்பைக் காட்டி கூத்தாடுகிறான். இறைவனின் ஆட்டத்திற்கு ஏற்ப நான்முகன் தாளம் கொட்ட, மாயோன் உடுக்கை அடிக்க, நந்தி தேவன் நற்குடமுழாம் வாசிக்க, கண்ணீர் மல்க கண்டு களிக்கிறார் காரைக்கால் அம்மையார். இவை அத்தனை சிற்பங்களும் ஒரே தூணில் இடம் பெற்றிருக்கின்றன. மற்றொரு தாண்டவச் சிலை சூரிய, சந்திரர்கள் கண்டு களித்து வணங்கி நிற்க, காலடியில் பதஞ்சலியும், வியாக்கரபாதரும் கூப்பிய கரத்துடன் வணங்கி நிற்க ஒரே காட்சியாகச் செய்யப்பெற்றுள்ளது. அறியாமைஎன்னும்

முயலகன் இறைவன் காலடியில் அழுத்தப்பெற்று விழி பிதுங்கி மாய்வது போன்று சிற்பம் வடிக்கப்பெற்றுள்ளது.

பாட்டும் பரதமும் கூட்டி இசைக்கேற்ப கூத்தாடும் எம்பிரானுக்குப் போட்டியாக ஆடவந்த காளியம்மையின் சிற்பம் மற்றொரு தூணில் இடம்பெற்றுள்ளது. அனல் மகுடம் தரித்து கோரைப் பற்கள் காட்டி எண்கைகளிலும் படைக்கலம் ஏந்தி ஆடும் பாவனையில் அழகாய் வடிக்கப்பட்டுள்ளாள்.

கோபியர் புடை சூழப் புல்லாங்குழல் எடுத்து அமுதகானம் இசைக்க அனைத்து உயிர்களும் அந்த அழகுக் கண்ணனின் காலடியில், ஒரு காலை மடக்கி மறு காலை ஊன்றி, சங்கு, சக்கரதாரியாய் அழகாக வடிக்கப்பட்டுள்ளது. இந்த எழில் கண்ணனின் சிற்பம் பெரும்பான்மையான இடங்களில் கண்ணனின் குழலெடுத்து ஊதும் பாவனையில் அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் இங்கு விஷ்ணுவின் அவதாரம்தான் கிருஷ்ணன் என்று காட்டும் நிலையில் சங்கு சக்கரத்தையும் இறைவன் கையிலேயே கொடுத்துள்ளான் சிற்பி. ரதி மன்மதனின் சிற்பங்களை மண்டபத் தூண்களில் அமைப்பது பிற்காலத்தில் மரபாகப் பின்பற்றப்பட்டுள்ளது. அவ்விரு சிற்பங்களும் எதிரெதிரே உள்ள தூண்களில், காண்போர் கவனத்தை ஈர்க்கும் வகையில் கண்ணுற வடிக்கப்பட்டுள்ளன.

மோகினியின் சிற்பம் அனைவரின் கவனத்தையும் கவரும் அழகிய சிற்பமாகும். பொட்டிட்டு பூச்சூடி, இடக்கையில் கண்ணாடி ஏந்தி, நாட்டியப்பாவை போல் நிற்கும் மோகினியின் சிற்பம் பாமரரையும் மயக்கும் பாங்குடைச் சிற்பமாக அமைக்கப் பட்டுள்ளது. பிற்காலப் பாண்டியர் காவத்தில், சிற்பத் தூண்கள் ஏற்பட வழிகாட்டியாக அமைந்துள்ளது இம்மண்டபம் என கூறினால் அது மிகையாகாது. பல ஊர்களில் சிற்பத் தூண் மண்டபத்தில் உள்ள சிலைகள் மனித உருவம் போல உருவமாக்கி இரண்டு கைகளோடு படைக்க இங்குள்ள சிலைகள் பல கைகளுடன் தெய்வ உருவங்களாக வடிக்கப்பட்டுள்ளன எனக் கூறின் அது மிகையில்லை.

தென்காசி குலசேகரமுடையார் கோயில் 1567-ல் அதிவீரராம பாண்டியனால் எழுப்பப்பட்டதாகும். இதன் வாயிலில் கோபுரம் கற்பகுதி மட்டும் காணப்படுகிறது கோபுரச்சுவர்ப் பகுதியில் கோட்டங்கள் அமைத்து தெய்வச் சிற்பங்கள் வைப்பதற்குப் பதிலாக புடைப்புச் சிற்பங்களாகப் பல தெய்வ உருவங்களை அமைத்துள்ளனர். இவற்றுள் பல சிவன் மற்றும் விஷ்ணுவின் திருக்கோலங்களாகும் இவற்றைத் தவிர முருகன், பிள்ளையார், பிரம்மா, துர்க்கை ஆகிய தெய்வச் சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன. ஆடும் நிலையிலும் இசைக் கருவிகளை வாசிக்கும் நிலையிலும் உள்ள ஆண், பெண் சிற்பங்களும் அழகு மிளிர உருவாக்கப்பட்டுள்ளன.

மேலும், சாம்பவர்வடகரை, புலியூர், விந்தன்கோட்டை ஆகிய ஊர்களிலுள்ள கோயிலில் தென்காசிப் பாண்டியர் சிற்பச் கலைக்கு எடுத்துக்காட்டும் வகையில் பல சிற்பங்கள் உள்ளன. குற்றாலத்திலும், சிவன் தலை கங்கைமங்கலத்திலும் அதிட்டானத்திற்கு அடியிலே கோட்டங்களை உருவாக்கி நரசிம்மர், தக்ஷிணா-மூர்த்தி, பிரம்மா போன்ற தெய்வச் சிற்பங்களை இடம் பெறச் செய்துள்ளனர். பிற்காலப் பாண்டியர் காலத்தில் திருப்பணி செய்யப்பட்ட கோயில்கள் சங்கரன் கோயிலும், தாருகாபுரமும் ஆகும். அவற்றிலும் பிற்காலப் பாண்டியர்கள் தெய்வச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.

குற்றாலம் சித்திரசபையில் காணப்படும் மண்டைப் பாணன் மற்றும் ஆடல் மகளிர் சிற்பங்கள் பிற்காலப் பாண்டியர் கலைத் திறனுக்கு மிகச் சிறந்த, குறிப்பிடத்தக்க சான்றுகள் என்றே கூறலாம். மண்டைப்பாணன் இசைக்கேற்ப மங்கையவள் ஆடுகிறாள். சருகுச் சேலை அலைபாய கதிர் நடனமாடுகிறாள் கயல்விழி விழித்து கைகளை வீசிக் காண்போரைக் கவரும் வண்ணம் பம்பரமாய் ஆடுகிறாள். பிற்காலப் பாண்டியர் சிற்பியின் உளியில் தான் எத்தனை நுணுக்கம். தான் கண்ட நாட்டிய மகளிருக்கு கல்லிலே வடிவம் கொடுத்துள்ளான். மண்டைபாணனோ அவள் ஆட்டத்தை ரசித்து ரசித்துத் தன் இசைக்குச் சுருதி சேர்க்கிறான். பிற்காலப் பாண்டியன் கைத்திறனுக்குக் கட்டியம் கூற இச் சிலைகளே போதும்.

பராக்கிரமபாண்டியன் காலத்துச் சிற்ப அமைப்பு பல்லவ, சோழ, முற்காலப் பாண்டிய சிற்பக் கலைகளிலிருந்து, மாறுபட்ட புதியதோர் வடிவுடன் விளங்குகிறது எனலாம். பல்லவ சிற்பங் களும், பாண்டியச் சிற்பங்களும் மென்மைத் தன்மை எதுவிமின்றி தடிமனாகவும், ஓரே சீராகவும் உருவாக்கப்பட்டிருக்கும். சோழ நாட்டுச் சிற்பம் மிகவும் மென்மைத்தன்மை வாய்ந்ததாகவும், மெலிந்த உருவமுடையதாகவும், வயிற்றில் சிறிய மடிப்புடனும் உருவாக்கப்பட்டிருக்கும். விஜயநகர சிற்பங்கள், உயரமான தாகவும், நாயக்கர் சிற்பங்கள் மிக வலுவான உடலமைப்பு கொண்டதைப் போன்று மிகத் தெளிவான பருத்த சதைகள் காட்டப்பட்டு வடிக்கப்பட்டிருக்கும். ஆனால், பிற்காலப் பாண்டிய சிற்பிகள் தங்கள் சிற்பங்களைச சாதாரண மனித உடல் அமைப்புடன் வடித்து காட்டுகின்றனர். அதிக அணிகளைச் காட்டாது கழுத்தில் மூன்று அணிகளையும், தோளில் ஒரு தோள்வளையும் கையில் இரண்டு வளையல்களையும் காட்டு வதை மேற்கொண்டுள்ளனர். கால்களில் தண்டையும், சிலம்பும் வடித்துள்ளனர். இடுப்பு ஆடையைத் தொடைவரை காட்டி யிருந்ததால், மூட்டுப் பகுதியைத் தெளிவாகக் காட்டியுள்ளனர். முப்புரி நூலை மூன்று பிரிவாகக் காட்டி பிரம்ம முடிச்சை மிகத் தெளிவாகவும், அழகாகவும் காட்டியுள்ளனர். தோள் மாலையை மிகத் தெளிவாகக் காட்டி உள்ளனர். ஆடை மடிப்புகள் இருபுறமும் கால்களை ஒட்டி இரண்டு அடுக்காகக் காட்டப் பட்டுள்ளன. இவற்றையெல்லாம் விட குவிந்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிழ் சிரிப்பும் என்ற தேவாரப் பாடல் வரிக்கு வடிவம் கொடுத்தது போன்று உதட்டைக் குவித்து சிரிப்பதைப் போன்று சிற்பத்தின் உதடுகளை அமைத்துள்ளனர். இது அவர்களின் சிற்பக் கலையின் தனித்தன்மை என்றே கூறலாம்.

## சுதைச்சிற்பம்

பிற்காலப் பாண்டியர் சுதைச் சிற்பக் கலைக்குத், தென்காசி விசுவநாதர் கோயிலின் பழைய கோபுரத்திலிருந்த சில சுதைச் சிற்பங்களை எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

"விண்ணாடர் போற்றும் தென்காசி பொற்கோபுர மீதிலெங்கள்
அண்ணாழில் செய்தபணி இப்படிக் குறையாய்க் கிடக்க
ஒன்னாதெனக் கண்டுயர்ந்த தட்டோடிங்கு முற்றுவித்தான்
மண்ணாளும் மாலதாசன் குலசேகர பாண்டியனே"

எனத் தென்காசி கோபுரப் பாடல் பராக்கிரம பாண்டினின் தம்பி கோபுரம் எழுப்பியதை விளக்கிக் கூறுகிறது கி. பி. 1925-இல் இக்கோபுரத்தின் ஒரு பகுதி அழிந்து பாதிக் கோபுரம் ஆயிற்று. 1966-இல் புதுக்கோபுரம் கட்டுவதற்காக எஞ்சியிருந்த கோபுரம் இடிக்கப்பட்டது. மொட்டைக் கோபுரத்தை இடித்துப் புதுக்கோபுரம் எழுப்புவதற்காகச் சேர்க்கப்பட்ட நிதி அதனை இடிப்பதற்கே சரியாகிவிட்டது. அவ்வளவு உறுதியாகச் செய்யப்பெற்றிருந்தது. அம்மொட்டைக் கோபுரத்தின் பல பெரிய அழகிய சுதைச் சிற்பங்கள் இடம் பெற்றிருந்தன. அந்த இடி பாட்டிலிருந்து எடுக்கப்பட்ட சில சுதை தலைகள் குற்றாலம் அருங்காட்சியகத்தில் காட்சிக்காக வைக்கப்பட்டுள்ளன. அச்சுதைச் சிற்பங்கள் குலசேகரபாண்டியன் காலத்தில் மிகப் பெரிய சுதைச் சிற்பங்களை அமைக்கும் வழக்கம் இருந்ததை எடுத்துக் காட்டு கின்றன. இச்சிற்பங்கள் மிக அழகிய தலை அலங்காரத்துடன், பெருத்த நீண்ட கண்களுடன், கூரிய மூக்குடன் மிக அழகாக வடிக்கப்பட்டுள்ளன. இவையே பிற்காலப் பாண்டியர் காலத்து சுதைச் சிற்பக் கலைக்கு சிறந்த எடுத்துகாட்டுகளாகின்றன.

மரச்சிற்பங்கள் :

பிற்காலப் பாண்டியர் காலத்து மரச் சிற்பக்கலைக்குச் சான்றாக எண்ணற்ற இடங்களை எடுத்துக் கூறலாம். சங்கரன்கோயில் பிரம்மதேசம் வாயில் கதவுகள் மிகப்பிரம்மாண்டமாக செய்யப் பெற்று பல மரச் சிற்பங்களை தாங்கி நிற்கின்றன. இக்கதவுகளில் சிவன், விஷ்ணு ஆகிய தெய்வங்களின் பல்வேறு கோலங்களும் விநாயகர், முருகன் ஆகிய தெய்வங்களின் உருவங்களும், தேவியரின் உருவங்களும் மரச்சிற்பங்களாக இடம் பெற்றுள்ளன. இவற்றோடு கதவை உருவாக்கியவர்களின் சிற்பங்களும் இவற்றில் செதுக்கி வைக்கப்பட்டுள்ளது. இவற்றுள் சங்கரன்கோயில் வாயில் கதவு

களில் ஒவ்வொரு சதுரமும் ஒரு கோபுர அமைப்பில் உருவாக்கப் பெற்று அதனுள்ளே மரச்சிற்பங்களை அழகுற அமைத்துள்ளது கண்டு களிக்கத்தக்கது.

தென்திருப்பேரை வாயில் கதவில் நவ திருப்பதிகளில் உள்ள விஷ்ணுவின் நின்ற, அமர்ந்த, கிடந்த கோலங்களும், நம்மாழ்வார் சிற்பமும் இடம் பெற்றுள்ளன. பிற்காலப் பாண்டியர் மரச் சிற்பக் கலைக்குத் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலைச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூறலாம். இங்குள்ள இரண்டு பெரிய தேர்களில் எண்ணற்ற தெய்வச் சிற்பங்களும், பூதம், யாளி, குதிரை போன்ற சிற்பங்களும் அழகாக உருவாக்கப்பட்டுப் பொருத்தப்பட்டுள்ளது. மேலும் இதில் பல காமச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.

நெல்லையப்பர் கோவிலில் இருந்து அம்மன் கோவிலுக்கு நுழையும் வாயிலில் மிக அழகிய மரச் சிற்பங்கள் பொருத்தப் பட்ட கதவுகள் காணப்படுகின்றன. இதில் முருகன் வள்ளியைத் திருமணம் செய்து கொண்ட கதை நிகழ்ச்சிகள் சிற்பமாக வடித்து வைக்கப்பட்டுள்ளன. இது காலத்தால் பிந்தியது ஆயினும் சிற்பியின் கைத்திறத்தாலும், கற்பனைத் திறத்தாலும் கலை அழகு பெற்று காட்சி தருகின்றன. வள்ளி தினைப்புனம் காக்கின்ற காட்சி மிகச் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். வள்ளி பரண்மேல் நின்று பறவையை ஓட்டுகின்ற காட்சி ஒரு சதுரத்தில் இடம்பெற்றுள்ளது. இதில் பரணும் அப்பரணுக்குத் தரையிலிருந்து ஏறிச்செல்வதற்கு அமைக்கப்பட்டிருக்கும் ஏணியும் மிகச்சிறப்பாக வடிக்கப்பட்டுள்ளன.

கிழவன் வேடத்தில் வந்து முருகன் வள்ளியுடன் உரையாடும் காட்சியும், யானை உருவில் விநாயகர் வந்து வள்ளியை அச்சுறுத்தும் காட்சியும் மிகச்சிறப்பாக உருவம் கொடுக்கப்பட்டுள்ளன.

மற்றொரு கதவில் அர்ச்சுணன் ஒற்றைக் காலில் நின்று தவம் செய்யும் காட்சியும், இறைவன் பாசுபதாஸ்திரம் வழங்கும் காட்சி யும் மிக அழகாக வடிக்கப்பட்டுள்ளன.

நெல்லையப்பர் கோயில் பஞ்ச சபைகளில் ஒன்றாகிய தாமிர சபைக்குரிய தலமாகும். இக்கோயில் இரண்டாம் திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் இச்சபை இடம்பெற்றுள்ளது. இதன் உட்பகுதி

மரத்தால் ஆனது. இதன் உத்திரப்பகுதி, எண்ணற்ற அழகிய சிறிய மரச் சிற்பங்களால் அழகுபடுத்தப்பட்டுள்ளது. பல்வேறு சிவத் திருக்கோலங்கள் இதில் இடம் பெற்றுள்ளன. மேலும், இக் கோயிலின் வடக்குக் கோபுரத்தின் உட்பகுதியில் எண்ணற்ற மரச் சிற்பங்களும் காணப்படுகின்றன.

மேலும், சிவசைலம், குற்றாலம், சித்திரசபை நுழைவு வாயில் கதவுகளிலும் பல அழகிய மரச்சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றைத்தவிர பல விஷ்ணு கோயில்களில் உ_ள்ள சொர்க்கவாசல் கதவுகளில் விஷ்ணுவின் பல கோலங்கள் உருவாக்கப் பெற்று அழகுபடுத்தப்பட்டுள்ளன. இவற்றில் பல வண்ணங்கள் பூசப் பெற்று உருவ அமைப்பு மாறிய நிலையில் அதன் அழகு குன்றி நமக்குக் காட்சி தருகின்றன.

இம்மாவட்டத்தில் காணப்படும் பல தேர்கள் 16, 17-ஆம் நூற்றாண்டில் செய்யப்பட்டவை. அவற்றில் பல அழகிய மரச் சிற்பங்கள் பொருத்தப்பட்டுக் காட்சியளிக்கின்றன. ஆழ்வார் திரு நகர் தேர்ச் சிற்பங்கள் மிகுந்த கலை அழகு வாய்ந்தவை. மிகச்சிறி தாகவும், அழகாகவும், நுணுக்கமாகவும் மரச்சிற்பங்கள் செய்யப் பெற்று சீராய் பொருத்தப்பட்டிருப்பதை இத்தேரில் காணலாம்.

பிற்காலப் பாண்டியர் காலம் அமைதியற்ற காலமாகும். அக்காலக்கட்டத்தில் தங்கள் ஆட்சியை நிலைநிறுத்திக்கொள்ளவே பாண்டிய மன்னர்கள் பல போர்க்களங்களைக் காணவேண்டி யிருந்தது. அந்நெருக்கடியான காலகட்டத்திலும் பல கலைக் கோயில்களை உருவாக்கி அவற்றில் பல அழகிய கற்சிற்பங்களை யும், மரச்சிற்பங்களையும் அமைத்திருப்பது பிற்காலப் பாண்டியர் களுக்குக் கலையின்மேல் இருந்த ஆர்வத்தினை நமக்கு உணர்த்துவ தாய் அமைந்துள்ளது.

# 'UVAVER' - AN ANCIENT TECHNICAL TERM

**Dr. N. Marxia Gandhi**

It is a well known fact that most of the inscriptions are documents of gifts made to the temples. They deal mainly with the transactions between the individuals or institutions. Inspite of it we can infer from them about the social and economical aspects of the bygone period. Sometimes even a short inscription may give very rare and interesting information to understand the ancient society. One such inscription is being analysed in the following paragraphs.

This inscription was copied by the Tamil Nadu State Department of Archaeology from a village known as Marakkanam in Tiruvannamalai Sambuvarayar District. It is written in the 26th regnal year of Rajakesarivarman, who may be identified with Rajārajā the great. The epigraph reads as follows:-

1. Swasti Sri Kovisaiya Rasakesari
2. panmarki yandu Irupattaravathu
3. Palkunrakkōttathu Kulaippalur na-
4. ttu Marakkunatturan Nambi Arumurai-
5. kku urom **uvaver** vaittamaikku otti
6. kkututta parisavathu uvaver a
7. lichchan Gangai-idai kumari idai chcheythan pava

8. ttil paduvan. **uva**
9. **ver** alichchan araikkarpon tandapata otti kkututtom Marakunatturom a-
10. nriyur antradu
11. kovakku nada . . . . .

Translation : Hail properity ! In 26th regnal year of Rajakesary Varman, the villagers (Urar) of Marakkunam hereby confer the ( right ? ) of Uvaver to Nambi Arumurai of the same village. Those who obstruct this right are bound to get the sins of those who committed sins in between the area of Gangai and Kumari and to remit quarter pon as penalty to the ruling king.

This inscription uses a rare term Uvāvēr. This term can be divided into two as uvā + Ēr. Uvā means full moon or new moon and 'Ēr' means plough. Hence there must be some connection between full moon and plough. What was that ?

In the beginning, plantation i.e. sowing and harvesting was mainly carried out by the women folk. But, after the invention of plough this task was transferred to the men. The yielding was treated as common property in the initial stage. In due course, when everything was brought under chiefdom, this right was also vested with the chief. It was believed that, because of his righteous acts the land yielding was more. So the first ploughing was reserved with him in every season. This ploughing was done on an auspicious day, i.e. generally on full moon day with appropriate rituals.

